உ

# வகுளகிரி க்ஷேத்திர மாஹாத்மியம்

கருங்குளம்





ப்ரம்ம ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள்

குமாரர்

கி. வெங்கடஜல சாஸ்திரிகளால் ப்ரசுரிக்கப்பட்டது

# முகவுரை

கிருத, த்ரேதா, த்வாபரயுகங்களில் தபோ, ஞாந, யோக, மார்க்கங்களே பகவானை அடையும் சாதனங்களாக இருக்க, இந்தக் கலியுகத்தில் பக்தியே ப்ரதான்யம் பெற்றுள்ளது. அர்ச்சாவதாரமாக ஆங்காங்கே, பல கோயில்களில் மூர்த்தி வடிவமாக பகவான் இருக்கிறார். சகல மதஸ்தர்களும் நாடும், திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் திரு 'வெங்கிடாசலபதி'' தென்னாட்டு பக்தர்களுக்கு வேண்டியதை அருள்பாலிக்க, கருங்குளத்தில் சந்தனக் கட்டையில் ஆவிர்ப்பவித்துள்ளார். இந் [illegible] வடமொழி எட்டுச் சுவடியிலிருந்து மாகாத்மியத் [illegible] முதல் பதிப்பில், வடமொழி, தென்மொழியிலும் அச்சு வடிவேற்றி, இரண்டாவது தடவையாக தமிழ் மொழியில் மட்டும் எழுதியிருக்கிறது.

இதிலுள்ள சொல் குற்றம், பொருள் குற்றங்களை நீக்கி, குணங்களை மாத்திரம் கிரஹித்து வேங்கடேசனுடைய அருள், எல்லோருக்கும் வேண்டுமென பிரார்த்தித்து வேண்டிக் கொள்கிறேன்.

கி. வெங்கிடாசல சாஸ்திரி
கருங்குளம்

உமா அச்சகம், திருநெல்வேலி-6.

1. வாழ்வு இனிக்க வானவர்க்கு விருந்தாக
தாழ்விலா சங்கரனுர் சந்ததமும் பணி
கின்றோர்க்கு
தேரின் கால் உருவாகும் வகுளாத்ரிபெருமான்
திருக்காதை கூறுங்கால் இனிதாக குறுகையூர்
நம்பிபதம் காப்பு.

2. நன்கருள் தனத்தை நாடினேர்க்கு உதவி
தென் புறத்தவர் தொல்லை அறவே மாற்றி
பின்பும் பிறவாநெறி தருமாம் ஆயர்குலக்
கண்ணபெருமான் தருவாகிஉறைகின்ற
கண்ணிமலர்
கருங்குளத்து வகுளாத்ரி வரை காண்பவற்கு

3. பிறவா நெறிகாண பிரணவப் பொருள் தேற
பேதையர்கள் மையல் அகல வேண்டில் திறை
யாரும்
தண்பொருளைத் தென்பாலில் வகுளமலை
உறைகின்ற
தருவான வேங்கடவன் திருக்கதையைக்கேள்

4. விண் தருவான் மருள்வந்து நம்மை மயக்கும்
போது
கண்ணொளி பலதந்து காவல் செய்வான் முன்
செய்த
எண்ணிலாத்தீவினையிற் வந்தநோய் பலவும்
போக்கி
பொன்னுடையோன்பால் நிதிகேட்கும்
வேங்கடவன்
ஏதுமிலா ஏழையர்க்கு இறங்கி எழிலாரும்
பொருளைத் தென்பாலில் வகுளகிரிமலைமேல்
உறைகின்ற குளிர் தருவானை வேங்கடவனைக்
கும்பிடு.

5. நிதியுடையோர்க்கல்லால் வட வேங்கடவன்
நிலைகாணர்
கெதியுடையார் நடையிற் சென்றும் கேசவன்
பதம் காணுப் பெருமையினுல்

அருள் தர செய்துங்க நல்லூரின் கீழ்பாலில் வந்தடுத்தால்
உண்ணச் சத்திரமும் உலகளந்தான் திருக் கோயிலும்
காணலைத்து உறங்காப்புளியும் உள்ளுவார் வினையும்
போக்கி எழுவரையும் கடந்து சென்று கண்ட திருப்த
பயனையும் தாம் தந்து யாரிவர் என்று யார்
யாரும் அதிசயிப்ப சந்தணத் தருவாய் உறைகின்ற
பெருங்கோயில் காணும் கடப்பரோ கவலைக் கடல்

6. தொண்டர் பிறந்தார் குறுகடியில் என எண்ணி
சோதித்திருமால் அருளோடு கிரங்குளத்தை
திருததவல கருங்குளத்து வகுள வரை மேலே
உறங்கா குறுகின் வடபாலில்
அருளாய் உருக்கொண்டார் பெருமாளே.

7. சொல்லொணுப் பிணிபோக்க சுந்திரத்தேர்
கேட்ட ஜோதி சொல்லாப் பொருளும் இல்லோரை
அல்லல் போக்கி அருள் சேர்க்க சீரார் அலை
மணி துள்ளும் பொருநைத் தென் பாலில் வகுளகிரி
வரைமேல் உறைந்து வாழ்க்கைப் பிணியும்
வயிறு நோவும் போக்கியருளும் தருஉருவானை
பேசார் நாவும் அருள் கேளார்ச் செவியும்
காணு விழியும் பயன் என்னே.

8. நாடும் பொருளாம் நமச்சிவாயம்
நால்வேதப் பொருளும் தனியாக
ஓதும்மந்திரம் நாரணரை உயரும்வகுளவரை
தனிமுகட்டி வேங்கடவா என்று உரைத்தே
சென்றக்கால் மானிடம எடுத்த பயன் காண்பார்.

**ஆஸ்திக மெய்யன்பர்களே !**

மூவினை போக்கி இகத்தில் இன்பமும் பரத்தில் பிறவாப் பெருநெறியும் அடைய வேண்டுமென்பது முக்காலும் கடந்த முனிவர்களின் தீர்ப்பு. எழு பிறவி எடுத்தும் இறைவனைக் காண்பதுதான் இகத்தில் கண்ட பேரின்பம் என்பதை திரு வேங்கடத்துப் பெருமான் யாத்திர தர்சன விளக்கம் எழுகடல் மணலை அளவிடினும் ஏழுமலை ஆண்டவனின் பெருமை அளவிட முடியாது என்பதை கண்டும் கேட்டும் யாம் தெரிந்து கொண்ட உண்மை. கைப் பொருள் உள்ளவர்கள் காண வசதியுடைய ஸ்ரீனிவாஸபிரான் நம் போன்றவர்களுக்காக காட்சி கொடுக்க தாம்பிரவர்ணியின் தென் கரையில் கண்ணன் பொய்கை என்ற திரு ஊரில் சேடனை மலையாக்கி செழித்த பல புளியந்தருவாக்கி சார்ந்தாரை அளித்துக் காக்க இரு சமயம் ஒன்றெனக் காட்டும் நிலை போல சந்தனத் தருவாய் எழுந்தருளியிருக்கும் பெருமான் திருவரலாற்றை எளியாரும் தெரியுவண்ணம் தமிழில் பிரும்ம ஸ்ரீ K. வெங்கடாசல சாஸ்திரிகள் அவர்களால் கிரந்தங்கள் பல பரிசோதித்து உருவாக்கப்பட்ட திருக் காவியத்தை பார்க்கும் பாக்கியத்தை எளியோர்க்கும் கிடைத்தது. மேற்கண்ட புத்தகம் காண்டங்கள் 5 உடையதாயிருந்தாலும் படிப்பவரின் மனம், வாக்கு, காயம், புத்தி, செயல் என ஐம்புலன்களையும் புனிதம் செய்வதாகவும் நன்னிலைக்கு வழி காட்டியாகவும் இருப்பதால் ஆஸ்திக சத்ஜனங்கள் யாவரும் இப் புத்தகத்தை வாங்கி பயின்று வகுளகிரி மேல் உறைகின்ற வனமாலாதர வேங்கடேசப் பெருமான் பொன்னார் கமலங்களின் அருள் பெற வேண்டுமென பல முறை அன்போடு பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்
அன்பர்க்கன்பன்

அபிநவ காளமேகம் அண்ணாவி ருமகிருஷ்ணன்
செங்கோல் மட ஆதீன வித்வான்
செங்கோட்டை

செவிக்குத் தேனென்ன இராகவன் புகழினைத் திருத்தும் கவிஞர் பெருமான் கம்பன் போன்ற ஞானிகள் புலர் இறைவனை ஸ்ரீ நாராயணமூர்த்தியை வருணனை செய்து வணங்கினர். அப் பெருமானுடைய திருவுருவங்களில் ஸ்ரீ வெங்கடாசலபதியைக் கண்ட குலசேகர ஆழ்வார்.

"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே" எனவும்.

"சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே' என சிலப்பதிகார ஆசிரியரும் போற்றிப் புகழ்ந்துள்ளர்

அந்தப் பெருமானின் திருவடிப் பெருமையை
தேடிய அகலிகை சாபம் தீர்த்த தால்
நீடிய உலகெலாம் அளந்து நீண்டதாள்
ஓடிய சகடிற உதைத்துப் பாம்பின் மேல்
ஆடியும் சிவந்த தாள் உன்னை ஆண்டதாள்'

என்று வில்லிப்புத்தூராழ்வாரும் வணங்குகின்றனர். "நின்ற வண்ணம் கிடந்தவண்ணம்" என்று ஸ்ரீ ரங்கநாதனையும் திருவேங்கடமுடையானையும் வர்ணிக்கின்றார் சிலம்பின் ஆசிரியர்.

நின்றவண்ணம் அருள்செய்யும் நிமலனாகிய வெங்கடாசலபெருமான் பல இடங்களில் வீற்றிருந்தாலும் கருங்குளமென்னும் பதியிலே கட்டையில் காக்ஷியளிக்கின்றார்யுகங்கள் பலவற்றுக்குமுன்னால் பிரகலாதனுக்காக கட்டையான தூணிலிருந்து தோன்றிய தருமமூர்த்தி கருங்குளத்தில் சந்தனக்கட்டையிலே சான்னித்தியம் பெற்று சகலஉலகங்களையும் ரக்ஷிக்கின்றான்.

இந்த அருமையான சன்னிதியின் பெருமையைத் தல புராணமாக வடமொழியிலே உள்ளதை வெளியிடும் பெரியார் ஸ்ரீ K வெங்கடசல சாஸ்திரிகளுக்கு அடியார்கள் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கின்றார்கள். இந்த அழகிய திருப்பணியைச் செய்யும் ஸ்ரீ ஜத் சாஸ்திரிகள் நமக்கு குருநாதராயிருந்து நல்வழி காட்டி இதே மாதிரி புத்தகங்களை மென்மேலும வெளியிட்டு நம்மை உய்விக்க வேண்டுமென்பதுதவிர இந்த ஏழை ராம நாமப் பரதேசி வேறு என்ன முகவுரை எழுத முடியும். அவர்கள் தொண்டு நீடூழி வாழ்க! அவர்கள் நீடூழி வாழ ஆண்டவன் வெங்கடாசலபதி அருள்க !

ஸ்ரீ வெங்கடாசலபதி சகாயம்

ஸ்ரீ ராமநாமப் பரதேசி

ஸ்ரீ வெங்கிடாசலபதி ஸஹாயம்

# வகுளாசல மாஹாத்மியம்

## முதலாவது அத்யாயம்

1. நாடறிய வகுளாசலத்தில் நாரா யணனிருக்க
காடுஞ் செடிதோறும் கால்கடுத்து—ஓடாமல்
போட்டவிட மங்கனமே பொருளதேடு வார்போல
நாட்ட முடனே நம்பு.

விஸ்தாரமான காருண்யத்தை யுடையவரும், கஸ்தூரி பொட்டோடு கூடினவரும் தனக்கு நிகரில்லாத வரும, கோபாலர்களுக்கு ஸுலபமாக அடையத் தகுந்த வருமானவெங்கிடாசலபதி மங்களத்தைக் கொடுக்கட்டும்.

அப்ராக்ருதமாயும், நித்யமாயும், ஸச்சிதானந்த வடிவமாயும், ஸ்வதந்த்ரராயும், ஏகமாயும், ஆனந்த வடிவமாயும், சார்ங்கம் என்ற வில்லை கையில் வைத்துக் கொண்டிருப்பவரும், பக்தப்ரியரும், பக்தியினலேயே அடையத்தகுந்தவரும் தேவாதிதேவர்களாலும், பிரும்மா விஞலும் பூஜிக்கத்தகுந்தவரும், விஷ்ணுவாயும், ஸ்ரீனிவாஸனுயும், கிருஷ்ணனுயும், வகுளகிரியில் வஸிக்கின்ற வரும், ஆறு அங்கங்களோடு கூடிய நான்கு வேதங்களாலும் ஆகமங்களாலும், புராணங்களாலும், அறிய முடியாத குணம் செய்கை இவைகளை உடையவரும் தன் பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுப்பவருமான ஸ்ரீனிவாஸரான உமக்கு அநேக நமஸ்காரம்.

முனிவர்கள் நைமிசாரண்யத்தில் ஒரு ஸமயம் ஸத்ர யாகத்தைச் செய்து கொண்டு நிர்மலமான வேகவதி என்னும் நதியை அடைந்தார்கள். அத்திரி, பராசரர், கண்வர், முத்கலர், கௌதமர், அங்கிரஸர், பார்க்கவர், வாமதேவர், புலஸ்த்யர், புலகர், பிருகு, மிருகண்டு, ஜாபாலி, ஸனந்தர்,

நந்தர், க்ரது, காத்யாயனர், ஸனகர், ஸனத்குமாரர் வைதாத்ரர், ஸத்யாஷாடர், காச்யபர் ரிஷ்யச்ருங்கர், விச்ரவஸ் இவர்களும் இன்னும் மற்ற முனிவர்களும்; சிஷ்யர்களும், சிஷ்யப்ரசிஷ்யர்களோடு கூட வேத வேதாந்தங்களை நன்ருகக் கற்றவர்களாய்க் கொண்டு வேகவதி என்ற நதியில் ஸ்நானம் செய்தார்கள். அங்கு முனிவர்கள் ஸ்நானம் செய்து விட்டு, சிறந்த மந்திரங் களையும் ஜபித்துவிட்டு அங்கு வந்த முனி சிரேஷ் டரான சூதரிடம கேட்டுக்கொண்டார்கள் பௌராணிக சிரேஸ்டராயும் ஹரித்யானபரராயும் இருக்கிறசூத முனி வரே தங்களு கு நல்வரவு. இப்பொழுதுதான் எங்களுக்கு மங்களம். தங்களைப் பார்த்ததால்உண்டானஸந்தோஷத் துடன் கூடவே நாங்கள் இருக்கிருேம். உலகத்தில் தங்களுடைய தர்சனமானது கிடைப்பது அரிது. அப்பேர்ப்பட்ட தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது என்று முனிவர்களால் கேட்கப்பட்டசூதர் பின் வருமாறு சொன்ஞர். அதாவது ஹே பிராமணேத்தமரே ஸாதுக் களான தங்களிடத்தில் மங்களம்குசலம ஏன் ஏற்படாது. ஆகையால் ஸத்ரயாகம் செய்கிற உங்களுக்கு மங்களமே தான். இவ்வாறு அந்த முனிவரால் சொல்லப்பட்டு மறுபடியும் சொன்ஞர். "ப்ரும்மன்" தங்களுடைய க்ருபையினுல் நாங்கள் எல்லோரும் க்ஷேமம், தங்களுடைய க்ருபையினுல் எங்களுடைய யக்ஞமானது நிறைவேறிற்று ஆனுல் இப்பொழுது வகுளாத்ரிபதி யான விஷ்ணுவினுடைய மஹாத்ம்யத்தை நாங்கள் கேட்க விரும்புகிருேம். அதை விஸ்தாரமாக தாங்கள் சொல்ல வேண்டும். தங்களைத் தவிர இதைச் சொல்லு வதற்கு யார் இருக்கிருர்கள்? இவ்விதம் சொன்ன முனி வர்களைப் பார்த்து மறுபடியும் ஒரு வார்த்தை சொன்ஞர். முனி சிரேஷ்டரே நன்ருய்க் கேட்டீர்கள்; எதனுல் நீங் கள் வகுளாத்ரிபதி மஹாத்மத்தைக் கேட்டீர்களோ அத ஞல் நீங்கள் பாக்யசாலிகளே, இதை விஸ்தாரமாக சொல்லு வதற்கோ கேட்பதற்கோ யாருக்குத்தான் சக்தி இருக்கிறது. அப்பேர்பட்ட பகவானுடைய மஹாத்மியத்தை சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொல்லிவிட்டு வகுளாத்ரிபதியான ஹரியாகிய ஸ்ரீனி வாசனை மனதில் த்யாநம் செய்து கொண்டு சொல்லு வதற்கு ஆரம்பித்தார்.

கங்கா நதிக்கரையில் ஸந்தோஷமாயும், புஷ்டியாயும் ஜனங்களோடும் கூடின வாருணஸீயென்ற பட்டண மிருக்கிறது. அந்தப் பட்டணத்திலே குணவானும் ராஜ நீதியில் தேர்ச்சை பெற்றவனும் தார்மிகனுயு மிருக்கின்ற சந்திரகாந்தன் என்ற அரசன் நகரத்தை பரிபாலித்துக்கொண்டிருந்தார். அந்த அரசன் ஸ்நானத் திற்காக பரிவாரங்களுடன் கங்கையையடைந்து அதில் ஸ்நானம் செய்து சிறந்த மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தார். இப்படி இருக்கும் பொழுது அங்கே ஸ்நானம் செய்து ஜபம் செய்து கொண்டிருக்கிற அகஸ்த்யரைப் பார்த்து அருகில் சென்று கைகூப்பி வணங்கி விட்டு அவரால் ஆசீர்வதிக்கப்பட்டு பின் வரும் வார்த்தையை அரசன் சொன்னர் ஹே முனீச்வரரே என்னல் முன்பு புண்ணியம் செய்யப்பட்டது ஸந்தேக மே இல்லை. ஏனெனில் வெகு காலமாக விரும்பப்பட்ட தங்களுடைய தரிசனம் எனக்குக் கிடைத்ததோ ஆகை யினல் தங்களுடைய முகமாகிற தாமரைப் புஷ்பத்தி லிருந்து விழுகிற கதாம்ருதத்தை பானஞ் செய்ய விருமபுகிறேன்; வகுளாத்ரிநாதனுடைய மஹாத்ம் யமாகிற கதாம்ருதத்தை காதுகளாகிற கைகளினல் பானஞ் செய்ய விரும்புகிறேன். பகவானே தங்கள் மூலம் முன்பு பாபத்தைப் போக்கக் கூடியதான விஷ்ணு, சிவன் இவர்களுடைய கதைகளும் அநேக தர்ம உபதே சங்களும் கேட்கப்பட்டன. ஆனல் இந்த வகுளாத்ரி மஹாத்ம்யமும், ஸ்ரீனிவாஸருடைய மஹாத்ம்யமும் முன்பு கேட்கவும் இல்லை உபதேசிக்கப்படவுமில்லை. ஆகையால் வைகுண்டத்திலிருக்கிற ஸ்ரீனிவாஸர் வகுளாத்ரிக்கு எப்படி வந்தார்! அதனுடைய பெருமை என்ன? எல்லாவற்றையும் கேட்க ஆவலாயிருக்கிறேன். உம்மைத்தவிர இந்த உலகத்தில் இதை யார் சொல்ல முடியும்? ஆகையால் தாங்களே விஸ்தாரமாக கிருபை யோடு இந்த மஹாத்ம்யத்தைச் சொல்லவேண்டும். அவருடைய வார்த்தையைக் கேட்டு விட்டு அகஸ்த்யர் தன் தலையை அசைத்துக்கொண்டு ராஜாவைப்பார்த்துச் சொல்லுகிருர். தங்களால் நன்ருகவே கேட்கப்பட்டது. தாங்கள் மஹா புத்திமான் என்று என்னுடைய அபிப் ராயம். எதனல் என்னுடைய மனதிலிருக்கும் அபிப்ரா

யத்தை அறிந்தீரோ அதனால் நீ புத்திமான் என்று எனது அபிப்ராயம். வகுளாசிரிமஹாத்ம்யத்தை சொல்லுவதற்காகவே இங்கே வந்திருக்கிறேன். சொல்லப்போகிறேன். கவனமாகக் கேளும. நான் முன்னொரு காலததில் விஷ்ணு தரிசனத்திற்காக பாற்கடலை அடைந்து சேஷ சாயியாயும் லக்ஷ்மீ சமேதரராயும், கருணையோடு கூடினவராயும் இருக்கிற ஸ்ரீமன் நாராயணனை அவ்விடத்தில் காணுமல் அவரை நினைத்துக் கொண்டு வைகுண்டம் சென்றேன். அப்பொழுது நடுவழியில் சாக்ஷாத் நாரதர் வந்து என்னிடம் இவ்விதம் சொன்னார். அதாவது மதுகைடபனை அழித்தவரும்; தாமோதரரும், கருணைக் கடலும், சங்கு சக்ரகதாரரும் தாமரைக் கண்ணனும், பக்தரக்ஷகரும், ஸ்ரீ பூமி நீளாஸமேதருமான ஸாக்ஷாத் நாராயணர் வைகுண்டத்தை விட்டு விட்டு வேங்கடகிரியில் ரமையோடு கூட ரமிக்கின்றார் என்று சொன்ன நாரதருடைய வார்த்தையைக் கேட்டு அங்கு சென்று பலவிதமான ஸ்தோத்ரங்களால் ஸ்துதித்து வணங்கி அவர் ப்ரஸாதத்தை அடைந்து எனது இருப்பிடமான மலயாசலத்தை அடைந்தேன். ஹே சந்திரகாந்தா! அந்த பகவான் இப்பொழுது தாம்பிரபரணீ நதிக் கரையில் ரமையொடு கூட கிரீடிக்க விருப்பங்கொண்டு மலை வடிவமான ஆதிசேஷனிடம் பின்வருமாறு சொன்னார். தாம்பிரபர்ணியின் தென் கரையில் நான் வசிக்க விரும்புகிறேன். அங்கு வகுளகிரி வடிவமாக இருக்க வேண்டும். அங்கு வகுள மலையாக நீ ஆகக் கடவாய். அந்த மலையில் ரமையோடு கூட நான் ரமிப்பேன். இவ்விதம் திருப்பதி பகவானுல் சொல்லப்பட்டு அனுமதிக்கப்பட்ட ஆதிசேஷன் வெங்கடாசலபதியை வணங்கி புறப்பட்டு தாம்பிரபர்ணியின் தென் கரையில் புளியமரத்தோடு கூடிய வகுள மலையாக அமைந்தார். பிறகு தேவர்கள், கந்தர்வர்கள் ஸித்தர்கள், பரமரிஷிகள் வித்யாதரர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், அப்ஸரஸுக்கள் முதலியவர்கள் அங்கு வரப்போகிற விஷ்ணுவை ஸேவிப்பதற்காக அந்த மலையை அடைந்தார்கள். தேவந்த்ரனும் இந்த மலையை வந்து சேர்ந்தான். இந்த மத்தியில் வேங்கடாசலத்தில் கருணநிதியான ஸ்ரீனிவாசர் பின்வருமாறு சொன்னர், இங்கு எப்படி உன்னேடு

ரமிக்கிறேனே அவ்விதமே வகுள கிரியில் நான் உன்னோடு கூட கிரீடிக்க விரும்புகிறேன். இங்கே கிரீடிப் பதற்கு காரணம் ஒன்று இருக்கிறது. அதைச் சொல்லு கிறேன் கேள். லோகத்தில் எவன் எதை எதை உத்தே சித்து என்னுடைய ஸமீபத்துக்கு வந்து தனத்தைக் கொடுத்து என்னை ஸேவிக்கின்ருனே அவன் எல்லா இஷ்டங்களையும் அடைகிருன். ஆனுல் என்னை ஸேவிப் பதற்காக புறப்பட்டவனுக்கு நடுவழியில் வெகு தூரம் இருப்பதால் சிரமம் ஏற்படும். அப்படி சிரமப்படுவதை நான் பார்க்க ஸஹிக்க மாட்டேன். ஆகையால் எங்கு எங்கு என்னுடைய பக்தர்கள் இருக்கிருர்களோ ஆங் காங்கு நாம் இருவரும் வஸிக்க வேண்டும். ஆகையால் தாம்பிரபர்ணி தீரத்தில் வகுளகிரியில் அங்கு இருக்கிறவர் களுடைய தரிசனத்திற்காக உன்னோடு கூட நான் வஸிப்பேன். அவர்களால் எதை எதை உத்தேசித்து எது எது கொடுக்கப்பட்டனவோ அதைப் பெற்றுக் கொண்டு அவர்களுடைய இஷ்டத்தைக் கொடுப்பேன். உன்னோடு கூட அங்கு இப்பொழுதே செல்வேன் என்று சொன்ன வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மீ பதில் சொல் கிருள். தாங்கள் கருணநிதி. பக்தர்களிடத்தில் அன்போடு கூடினவர்கள். ஆகையால் நாம் அந்த மலையை உத்தேசித்து . நாம் இருவர்களும் செல்வோம் என்று சொன்ன லக்ஷ்மியின் வார்த்தையைக் கேட்டு விட்டு எதிரில் தோன்றிய கருடன் மேல் ஏறிக் கொண்டு லக்ஷ்மியோடு கூட புறபபட்டார். தேவர்கள் எல்லோரும் கருடன் வருகிற சப்தத்தைக் கேட்டு மிகவும் ஸந்தோஷ மடைந்தார்கள். இந்த மத்தியில் அந்த மலையில் திவ்யா பரண பூஷிதமாய் ஏதோ ஒரு ஒளி தோன்றிற்று. அப்பொழுது துந்துபி வாத்யங்கள் முழங்கின. புஷ்ப வருஷமும் ஆகாசத்திலிருந்து விழுந்தது. கின்னரர்கள் பாடினர்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள். தேவர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், மஹரிஷிகள் எல்லோரும் வகுளாதிபதியான ஸ்ரீனிவாஸனை ஸ்தோத் ரம் செய்தார்கள், தேவந்திரனும் ஸ்ரீனிவாசனை வணங்கி விட்டு ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தான். ஹே தேவ தேவ, ஜகன்னுத — கருணைக் கடலே— ஹரியே அசுரர்

களை அழிப்பவரே — தாமரைக் கண்ணு உமக்கு நித்யம் நமஸ்காரம்,

ஹே நரசிம்ம, பரப்பிரும்ம, பரஞ்சோதியே, பாமாத் மாவே நாராயணரே வேதாந்த பிரதிபாத்யரே யோகி களால் அடையத் தகுந்கவரே ஆதிசேஷன்மேல் படுத் துக்கொண்டு இருப்பவரே நீலமேகத்துக்கு ஸமானமான ஆதிசேஷன் கிரணங்களால் அலங்காிக்கப்பட்டவரே, வகுளாத்ரிபதே எல்லாமாயும் இருப்பவரே, பிரும்மாவி ஞல் வணங்கத் தகுந்தவரே லக்ஷ்மீபதியே உமக்கு நமஸ்காரம் என்பதாக ஸ்தோத்ரம் செய்துவிட்டு வலம் வந்து முறைப்படி இந்திரன் ஆராதித்தான். ஸ்வாமி புஷ்கரணியும் அந்த வகுளகிரியில் வந்து ஆவிர்பவித்து தாம்பிரபர்ணியோடு சேருகிறது. இந்த ஸ்வாமி புஷ் கரணி தாம்பிரா ஸங்கமத்தில் எந்த மனிதன் ஸ்நானம் செய்கிருனே ஸகல பாபங்களினின்றும் விடுபட்டு எல்லா இஷ்டங்களையும் அடைவான். ஆகையால் அதில் ஸ்நானம் செய்து பரிசுத்தனுகி வகுளாத்ரிபதியான ஹரியை நித்யம் எவன் ஸேவிக்கிருனே அவன் எல்லா அபீஷ்டங்களையும் அடைகிருன் வகுளாத்ரீசனை ஸேவிப்பதற்காக எவன் புறப்படுகிருனே அவன் சர்வ பாபங்களிலிருந்தும் விடுபடுகிருன். அப்படி இருக்க நித்யம் ஸேவிக்கின்ற நம் போன்ற மனிதர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா! ஸ்ரீமானுயும் கருணைக் கடலா யும் லக்ஷ்மீபதியாயும். நீலமேகம் போன்ற காந்தியோடு கூடியவரும், தாமரைப் புஷ்பம் போன்று கண்ணை உடை யவரும், பக்தர்களுடைய கஷ்டத்தைப் போக்குகின்ற வரும், சங்கு சக்கரங்களை கையில் வைத்துக் கொண்டு இருப்பவருமான பகவான் இந்த வகுளகிரியை வந்து அடைந்தார். அவரை பக்தி செய்து இந்த மலையை வந்து அடைந்தாலே அவன் ஸகல ஐச்வர்யங்களை அடைவான் என்று சொல்லவும் வேண்டுமோ?

ஸ்ரீனிவாஸன் ஆவிர்ப்பாவம் என்கிற முதல் அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீனிவாஸோ ரக்ஷது

ஸ்ரீனிவாஸர் ரக்ஷிக்கட்டும்

## 2-வது அத்யாயம்

நம்பி முயல்வார்க்கு நட்டமில்லை என்ற மொழி
அம்புவிபோர் சொல்லவறிந்திலையா —கம்பமதில்
உண்டென்ற போதே யோங்கி மெழுந்த வருட்
கண்டிருந்து மனைக் கலக்கம்

சூதர்:—இந்தப்பிரகாரம் அகஸ்த்யமுனிவர் சொல்லி விட்டு மறுபடியும் சொல்லுகிறார். எவரை நினைத்த மாத்ரத்தாலே மஹாபாபிகூட பாபத்திலிருந்து விடுபடு கிறானோ எந்தெந்த பாபத்திலிருந்து எவர் எவர்கள் விடுபட விரும்புகிறார்களோ அவர் அவர்களாலே வகுளாத்ரிபதி ஸேவிக்கத் தகுந்தவர், கடைசியில் விஷ்ணு பதத்தையும் அடைகிறார்கள். இந்தவிஷயத்தில் ஒரு இதிஹாசத்தைச் சொல்லுகிறேன் கேளும் பூமியின் மத்தியிலிருக்கின்ற மஹாமேருபர்வதத்திற்கு தென் திசையில் நதி, மலை இவைகளால் அலங்கரிக்கப்பட்ட பாஞ்சாலம் என்ற பெயரோடு கூடிய ஒரு தேசம்இருக் கின்றது. அங்கு லக்ஷ்மீவாஸம் என்று பெயரோடு கூட ஒருபட்டணம் இருக்கிறது ஸ்வர்க்க லோகத்தைப் பழிக் கக்கூடிய அழகோடு கூடியதும் அனேக ஜனங்கள் நிறைந்த ராஜவீதியோடு கூடியதுமான அந்த பட்டணத்தில் சித்ராங்கன் என்ற பிரசித்திப் பெற்ற ஒரு அரசன் இருந்தான். அவருக்கு கிருதமலா என்ற மனைவி பேச்சினால் குயிலை ஜயித்தவளாயும் சிறந்த லக்ஷணத்தோடு கூடியுமிருந்தாள். இந்த்ராணியோடு கூட இந்திரன் ரமிப்பதுபோல அந்த மனைவியோடுகூட சித்ராங்கன் ரமித்து வந்தான். அந்த அரசன் தன்னு டைய 30-வது வயதில் வயிற்று வலியால் பீடிக்கப்பட்டு மெலிந்தவனாயும், வாடிய முகத்தோடு கூடினவனாயும் ஆஹாரமில்லாமலும், ஸந்தோஷமில்லாமலும் இருந்து கொண்டு மின்னல் போலிருக்கிற தன் மனைவியிடம் சொல்லுகிறார் ஹேக்ருதமாலே! வயிற்று வலியால்நான் மிகவும் பீடிக்கப்பட்டு இருக்கின்றேன், ஆகையால்

நிச்சயமாய் நான் இனிமேல் ஜீவிக்கமாட்டேன் ராஜ்யத்திலேயோ, பிள்ளைகளாலேயோ தனத்திலேயோ ரத்தினத்திலேயோ என்ன பிரயோஜனம்? வயிற்று வலியால் பீடிக்கப்பட்ட எனக்கு உன்னால் தான் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றையும் சகிக்கலாம் ஆனால் இந்த வயிற்று வலியை ஸஹிக்க முடியாது. ரோகியாயும், தரித்திரனாகியும் இருப்பது மிகவும் ஸஹிக்க முடியாததே என்று சித்ராங்க ராஜன் தன் மனைவியிடம் சொல்லும்பொழுது த்வார பாலகன் சித்ராங்க ராஜாவிடம் வந்து பின் வருமாறு சொன்னான். ஹே அரசே முனிசிரேஷ்டரான நாரத முனிவர் தங்களைப் பார்க்க வாசலில் நிற்கிறார் என்று சொன்னதைக் கேட்டு சந்தோஷமனதுடன் ராஜா நாரதரை இவ்விடம் அழைத்து வரும்படி ஆக்ஞாபித்தார். அப்படியே ஆகட்டுமென்று சொல்லி வேலைக்காரன் நாரத முனிவரிடம் சென்று ராஜா தங்கள் வரவை எதிர் பார்க்கின்றார். நாரதரும் நாராயண, நாராயண என்று மஹதீ என்ற வீணையை மீட்டிக்கொண்டு அவ்விடம் சென்றார். ராஜா முனிவரைப் பார்த்து மனைவியோடுகூட எழுந்து தன்னுடைய ரோகம் நிவர்த்தியாகி விடும் என்று எண்ணிக் கொண்டு முனிவரைப் பூஜித்து குசல பிரச்னத்தைக் கேட்டு பின்வருமாறு சொன்னார். உடன் நாரத முனிவரால் க்ஷேம சமாசாரம் கேட்கப்பட்டு எல்லாரும் க்ஷேமம் என்று பதில் சொன்னவுடன் நாரதர் ராஜா முகத்தைப் பார்த்து கலக்க முள்ளவர் போல் தோன்றுகிறதே என்று சொன்னதும் ராஜா தங்கள் அனுக்ரஹத்தால் எல்லோரும் சௌக்கியமே ஆனால் என் உதரத்தில் வலி ஒன்று பீடிக்கிறது. என்ன பாபத்தால் இந்த ரோகத்தை அடைந்தேன். அந்த ரோகத்தை நிவர்த்திக்க உபாயம் என்ன என்பதை தாங்கள் சொல்ல வேண்டும் என்று சொன்ன ராஜா வார்த்தையை நாரதர் கேட்டு ஹே அரசே! உன் ரோகத்திற்கு காரணத்தையும், அதன் நிவிருத்திக்குள்ள உபாயத்தையும் சொல்லுகிறேன் கவனமாகக்கேள் முன் ஜென்மத்தில் கார்முகன் என்று பெயரோடு கூடிய வேடர்களின் தலைவனாக நீ இருந்தாய். ஒரு ஸமயம் பரிவாரங்களோடு கூட வேட்டையாடுவதற்கு காட்டுக்கு

மிகவும் தாகத்தினால் பீடிக்கப்பட்டு ஒரு குளத்தை அடைந்தாய். அங்கு தாகவிடாய் தீர்த்து கரையில் இருக்கும் பொழுது தால்ப்யர் என்ற முனீச்வரர் தன் மனைவியோடு கூட மான் ரூபத்தை எடுத்துக்கொண்டு; கிரீடித்துக்கொண்டு இருப்பதை பார்த்தாய். அவர் ரிஷி என்று தெரியாமல் பாணத்தை பிரயோகித்தாய். அந்த பாணத்தினால் ஆண் மானான ரிஷி அடிக்கப்பட்டு மான் ரூபம் மாறி ரிஷி ரூபமாகி ஹீன ஸ்வரத்துடன் நான் மிருக ரூபம் எடுத்துக்கொண்டு ஸ்த்ரீயோடுகூடரமித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது உன் பாணத்தால் நான் அடிபட்டேன். உன் பாணம் என் வயிற்றைப் பீடிக்கிறது. ஆகையால் நீ இது போல வயிற்று வலியால் பீடிக்கப்படுவாய். அது எவ்வாறு என்றால் பத்து ஜன்மங்களில் சண்டாளனாகவும் பிறகு ஒருஜன்மம்தனிகனாகவும் சூத்திரனாகவும் அதன் பிறகு பிராமணனுடைய ஸஹவாசத்தாலே சிறந்த வியாபாரியாகவும் வைச்யனாகவும் ஆவாய். தார்மிகனாகவும் ஈச்வரபக்தியோடு கூடியுமிருப்பாய் ஒவ்வொரு ஜன்மந்தோறும் வயிற்றுவலியால் பீடிக்கப் படுவாய் பிறகு கடைசி ஜன்மத்தில் நீதிமானும் தார்மிகனுமான ராஜாவும், தனவானும் பிருமணர்களை பூஜிக்கிறவனுமாகி 30-வது வயதில் வயிற்று வலியால் பீடிக்கப் படுவாய் என்று சபித்துவிட்டு, ஸ்திரீயோடு கூட ஸ்வர்க்கத்தை அடைவாய்என்றார். முனிவருடைய சாபத்தால் ஒவ்வொரு ஜன்மாவை அடைந்து இப்பொழுதும் அவ்விதமாகவே ஸர்வசம்பத்தோடு கூடிய அரசனாகவே ஆகி வயிற்றுவலியால் பீடிக்கப்படுகிறாய். அதின் நிவிருத்தியைச் சொல்லுகிறேன். தாம்ர பர்ணியின் தென்கரையில் புளிய மரத்தோடு கூடிய வகுளகிரி என்ற ஒருமலை இருக்கின்றது. அதன் உச்சியில் ஸாக்ஷாத் ஸ்ரீனிவாஸர் ரமையோடு கூட ஸந்தோஷமாக ரமித்துக் கொண்டிருக்கிறார். இந்த ஸ்ரீனிவாஸரை அதிக தனத்தைச் செலவு செய்து அபிஷேகம் அலங்கார முதலிய பூஜைகளைச் செய்தால் அவர் உன்னுடைய வயிற்றுவலியைப் போக்கடிப்பார். ஸந்தேஹமே இல்லை. நீ உன்னுடையவியாதி நீங்கிய பிறகு பகவானை ஸ்தோத்ரம் செய்து இஷ்டங்கள் நிறைவேறியவனாய் உன் பட்டணத்தைப் போய்ச் சேருவாய். இது நிற்க, அந்த வகுளகிரி மலையில்உத்திர

பாகத்தில் பார்வதியோடுகூட பரமசிவன் மார்த்தாண்டேச்வரர் என்ற நாமதேயத்தோடு கூட ஆவிர்பவித்திருக்கிருர். அவரையும் முதன்மையாக ஸேவிக்க வேண்டும். அப்படியே குலசேகர் நாயகியான தேவியையும் நமஸ்கரிக்கவேண்டும். அதன் பிறகு விஷ்ணுவை பஜிக்க வேண்டும். அந்த விஷ்ணுவே ஸ்ரீனிவாஸர் என்ற பெயரோடு அங்கு வஸிக்கிருர். ஆனபடியால் நீ யதேஷ்டமான தனத்தை எடுத்துக் கொண்டு உன் மனைவியோடுகூட வகுளாத்ரீசனை, ஸேவிப்பதற்காகச் செல்ல வேண்டுமென்று நாரதர் சொல்லி முடித்தார்.

வகுளகிரி மஹாத்ம்யத்தில் சித்ராங்க ரோக நிவிருத்தியைச் சொல்லுகிற

2-வது அத்யாயம் முற்றிற்று

## 3-வது அத்தியாயம்:

3. பிதுரார்ச் சிதம்போல பிராரத்வ மாமனமே
விசனப் படுவதினல் விட்டிடுமோ – மெதுவாக
பட்டுத் தொலைத்தக்காள் பழையவடியார் போல
தொட்டுக் கொளு ஈசன் துணை.

நாரதர் சொல்லுகிருர்:– இந்த விஷயத்தில் ஒரு இதிஹாஸத்தைச் சொல்கிறேன் கவனமாகக் கேள். ஜனக் கூட்டத்தோடு கூடினதும், கனவான்களும் தனவான்களும் நிறைந்த கந்தரகம் என்ற ஒரு அக்ரஹாரம் இருக்கிறது. அதில் வேத வேதாந்தங்களைக் கரை கண்டவராயும், தனிகனுயும், நாஸ்திகனுயும், அன்னதானுதிகள் செய்யாதவனுயும், கிருமாதிபதியாயும், எப்பொழுது தனர்ஜிதத்தில் ஈடுபட்டவனுயும். விஷ்ணு, சிவன் இவர்களை ஸேவிக்காதவனுகவும், நித்யகர்மாக்களை செய்யாதவனுகவும், ஸத்ஸங்கம் இல்லாதனுயும், நன்ருய்ப் பேசும் சாமர்த்தியம் உள்ளவனுயுமான

'பிரும்மதத்தன்" என்று ஒரு பிராமணன் இருந்தான். அவனுக்கு வாஸவி என்று பத்னியும், வினதன், ஜம்பன் என்ற இரண்டு புத்திரர்களும் இருந்தார்கள். அந்தப் பிள்ளைகள் ஸர்வ சாஸ்த்ரங்கள் அறிந்தவர்களாயும், நியாய யன்யாயங்களை தெரிந்தவர்களாயும் இருந்தார்கள். இவ்விதமாக இரு பிள்ளைகளோடும் மனைவியோடும் கூடிக்கொண்டு எப்பொழுது உதரம்பரியாகவே ஸந்தோஷமாகக் காலம் கழித்து வந்தான். அந்தக் கிருமத்துக்கு ஸமீபத்தில் வசிக்கின்ற கர்க்கர் என்ற பிராமணர் ஸர்வ பாபத்தைப் போக்கடிக்கக் கூடிய கங்கையில் ஸ்நானம் செய்வதற்காக விருப்பங் கொண்டு தன் மனைவியிடம் சொன்னார். 'ப்ரியே' பிள்ளைகளோடும் உன்னோடும் கூட கங்கைங்கு ஸ்நானம் செய்யப்போக விருப்புகிறேன். ஆகையால் இப்பொழுதே நீ பிள்ளைகளோடும் கூட வரவேண்டும், என்று பத்னியிடம் சொன்ன வார்த்தையைக் கேட்ட பிள்ளைகள் தந்தையைப் பார்த்து அப்படியே ஆகட்டும் ஆனால் தந்தையே ஒரு வார்த்தை சொல்லவேண்டும். இப்பொழுது எங்கும் திருடர்கள் பயம் இருக்கிறது. நாம் கங்கா ஸ்நானத்திற்குச் சென்றால் ஒருவரும் இல்லாத வீட்டில் திருடர்கள் புகுந்து எல்லாவற்றையும் திருடர்கள் திருடிக்கொண்டு போவார்கள். ஆகையால் கிராமாதிபதியாயும் பேசும் திறமை உள்ளவனும், தங்களுடைய அம்மாஞ்சியாயும் அதிகப் பணம் உள்ளவனுமிருக்கின்ற பிரும்ம தத்தனுடைய கிருஹத்தில் நம்முடைய எல்லா தனங்களையும் ஒப்படைத்து விட்டுச் சென்றால் திருட்டுப் பயம் இல்லை என்று சொன்ன புத்திரர்கள் வார்த்தையைக் கேட்டு அவ்விதமே கர்க்கர் என்ற பிராமணர் செய்து விட்டு பத்னி, புத்ராள் இவர்களோடு கங்கா யாத்திரை புறப்பட்டார். பிரும்ம தத்தனும் கர்க்கர் கொடுத்த எல்லாவற்றையும் வாங்கி ஸந்தோஷமுள்ள மனதோடு வீட்டில் வைத்தார். பிறகு கர்க்கர் மனைவியோடும், பிள்ளைகளோடும் கூட கங்கா ஸ்நானம் செய்து விட்டு பரிசுத்தராக திரும்பி ஊர் வந்து சேர்ந்தார்கள். சில நாள் சென்ற பிறகு அம்மாஞ்சியாயும், கிருமாதிபதியாயும் உள்ள பிரும்ம தத்தனிடம் சென்று எல்லாம் உம்மிடம் கொடுத்து வைக்கப்பட்ட தனம் முதலிய

வற்றைக் கொடும். உம்மை நினைத்து கங்கையில் ஸ்நானம் செய்தேன் என்று கர்க்கரால் சொல்லப்பட்ட இவர் சிரித்துக் கொண்டு பதில் சொன்னார். ஓய் நீ யார்? எந்த ஊர்? நீர் எங்கிருந்து வருகிறீர்? பிருமண அதமனே உம்மால் என்னிடத்தில் வைக்கப்படவில்லை என்னிடம் ஒரு அக்ரமும்மில்லை ஆகையால் இங்கு நிற்காதே வெளியில் செல் அப்படிப் போகவில்லையானால் உம்மை அடித்து விடுவேன் என்று சொல்லி வாயாடியானதாலும் பலவானானதாலும் கிருமதிபதியானதாலும அவரை அடித்து ஓடும்படி செய்தார். எவ்விதத்திலும் பலமில்லாத கர்க்கர் பிரும்ம தத்தரை சபித்தார். ஹே பிரும்ம·தத்தா என்னுடைய பொருளை அந்யாயமாக நீ எடுத்துக் கொண்டாய். ஆகையால் நீ தரித்திரனாகவும், வியாதியோடு கூடினவனாகவும் ஆகக கடவாய் என்று சபித்து விட்டு சோகத்துடன் தன் கிருமம் போய்ச் சேர்ந்தார். பிரும்ம தத்தனும உடன் தரித்திரனாகவும் வியாதியோடு கூடினவனாகவும் ஆய் விட்டான் உடனே வயிற்று வலி ரோகத்தைச் சகிக்காமல் தரித்திரனான பிரும்ம தத்தன் ;ஜோதிஷரை அழைத்து ஓய் ஜோதிஷ விற்பன்னரே என்ன தோஷத்தினால் வயிற்று வலியையும் தரித்திரத்தையும் நான் அடைந்தேன். என்னுடைய ஜாதகத்தைப பார்த்து தோஷங்களையும் அதன் பரிகாரங்களையும் உம்மால் சொல்லப்பட வேண்டும், பரிஹாரத்தை நான் இப்பொழுதே செய்கிறேன் என்று சொல்லி தன் ஜாதகத்தைக் கொடுத்தார் ஜோதிஷர் அதைப் பார்த்துவிட்டு ஒரு தோஷமும் இல்லை. ஆனால் உத்தம பிருமண சாபமானது உம்மை பீடிக்கின்றது. அதற்கு பரிஹாரம் சொல்கிறேன் அதாவது ஸ்ரீநிவாஸரை ஸேவிப்பதற்கு தாங்கள் செல்வீர்களானால் இந்த ரோகத்திலிருந்து விடுபடுவீர்கள் என்று சொனன வார்த்தைதையைக் கேட்டு பிரும்ம தத்தர் மனைவி, புத்ரர்களோடுகூட வெங்கடாசலபதியை தர்சனம் செய்வதற்காக திருப்பதிக்குச் சென்றார். பலவித ஸ்தோத்ரங்களால் வெங்கடாசலபதியை ஸ்தோத்ரம் செய்து விட்டு மன அடக்கத்துடன் பூஜித்தார். அப்படி பூஜித்தும் தன்

ரோகம் நிவர்த்தியாகாமல் கவலையுள்ள மனதினராய் தூங்கிவிட்டார். அப்படித் தூங்கும்பொழுதும்ஸ்வப்பனத்தில் பிராமண ரூபியாக ஸ்ரீனிவாஸர் தோன்றி இந்த இடத்தில் உனக்கு ரோக நிவர்த்தி ஏற்படாது. வகுளம் என்ற மலையில் தான் உன் ரோகம் நிவர்த்திஅடையும். அந்த வகுள மலையில் நான் வசிக்கின்றேன். அங்கு சென்று என்னை பஜித்தால் உன்னுடைய வியாதி போய் விடும். பிறகு சாபம் நீங்கினவனாகவும். தனிகனாகவும் ஆவாய். ஆகையால் அந்த வகுள மலைக்குச் செல்ல வேண்டும் என்று சொல்லிவிட்டு ஸ்ரீனிவாஸர் மறைந்து விட்டார். பிரும்மதத்தனும் ஸ்வப்பனம் கலைந்து எழுந்து தன் மனைவியிடம் தான் கண்ட துயிலைச் சொல்லி எந்த வகுள மலையில் லக்ஷ்மீபதி வஸிக்கிருரோ அந்த மலைக்கு மனைவியோடுகூட வந்து சேர்ந்தார். சகல பாபத்தைப் போக்கக்கூடிய ஸ்வாமி புஷ்கரணி, தாம்ரா ஸங்கமத்தில் ஸ்நானம் செய்து பக்தியோடுகூட வகுளாத்ரிபதியான ஹரியை பஜனம் செய்து வருகிருர். இவ்வாறு சில தினங்கள் சென்ற பொழுது பிரஸன்னரான பகவான் பிரும்ம தத்தரை ரோகத்திலிருந்தும் விடுபட்டவராகச் செய்தார். பிரும்ம தத்தரும் ஸந்தோஷ மனத்தோடு கூடிக் கொண்டு வகுளாதிபதியை ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தார். ஹே நாராயண, ஹ்ருஷீகேச, கருணைக் கடலே, வேதாந்தத்தின் ஸாரமானவரே புருஷோத்தம என்னைக் காப்பாற்றும். ப்ரஹ்லாதன் கஷ்டத்தைப் போக்கினவரே, லக்ஷ்மீபதியே, தாமரைக்கண்ணனே என்னைக் காப்பாற்றும். ஸ்ரீவத்ஸத்தோடு கூடியவரே, ஸ்ரீவேங்கிட கிரி நாயகரே, அசுரர்களை அழிக்கிறவரே, வகுள கிரீஸ்வரரே என்னைக் காப்பாற்றும். தேவர்களால் பூஜிக்கப் பட்ட பாத கமலத்தோடுகூடியவரே, நரஸிம்மாவதாரம் எடுத்தவரே. தாமரைக்கண்ணுே என்னைக் காப்பாற்றும். இவ்வாறு லக்ஷ்மீபதியை பிரும்மதத்தர் ஸ்தோத்ரம் செய்துவிட்டு மனைவியோடுகூட தன் இருப்பிடம் வந்து சேர்ந்தார். ஆகையால் ஹே அரசே இப்பொழுதேஅந்த வகுளகிரிக்குச் செல்ல வேண்டும். அவ்விடத்தில் எல்லா வியாதிகளும் நிவர்த்தியாகும் சந்தேகமே இல்லை என்று சித்ராங்க ராஜனிடம் சொல்லிவிட்டு நாரதர் ஸ்வர்க்க லோகம் சென்ருர். க்ருதமாலாபதியான சித்ராங்கதன்

ஸந்த்தோடு கூடிக் கொண்டு வகுளம்" என்ற மலைக்கு உன்னோடு கூட நான் சென்றால் ரோகத்திலிருந்து விடு பட்டவனாக ஆய்விடுவேன் என்று மனைவியிடம் சொல்லி உடனேசித்ராங்கதன் தன் கொலுமண்டபத்தை அடைந்து தன் முதல் அமைச்சனிடம் இவ்வாறு சொன்னான். நான் ஸ்ரீனிவாஸரை ஸேவிப்பதற்காக வகுளகிரி போக விரும்புகிறேன். ஆகையால் இந்த ராஜ்யத்தை நான் வரும் வரை நீயே பார்க்கவேண்டும் என்று சொன்னதைக் கேட்ட எல்லா அமைச்சர்களும் ராஜாவிடம் சொன்னார்கள். அப்படியே தாங்கள் வரும் வரை இந்த ராஜ்யத்தை பார்த்துவருகிறோம். உடனே ராஜ பரிவாரங்களோடும், பட்டமஹிஷியோடும் கூட ஸ்ரீனிவாஸனை ஸேவிப்பதற்காக ஏராளமான தனத்தை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்.

சித்ராங்கத ராஜன் வகுள மலைக்கு வந்த மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

## 4-வது அத்யாயம்

இட்டார்க்கு இட்ட பலன் என்றபடி—யூழ்வினையிற்
பட்டாலும் ஈசன்மேல் பற்றுடையார்—
கெட்டதுதுண்டோ
நோய படுவதெண்ணி மனம் நோகாதோ
யீன்றெடுத்த
தாய் விடுமோ சேய்முறையைத் தான்

**சந்திரகாந்த ராஜா:–** இப்படிச் சொன்ன அகஸ்த்தியரைப் பார்த்து வணக்கத்தோடு கூடமிகவும் ஸந்தோஷமடைந்து ஹே முனிசிரேஷ்டரே! விஷ்ணு மஹாத்மயத்தைக் கேட்கும் ஸமயத்தில் அங்கு ஆவிர்பவித்திருக்கிற பரமசிவன் வரலாற்றைக்கேட்கப்படவில்லை. ஆகையால் இப்பொழுது நாரதராலே சித்ராங்கராஜனுக்குச் சொல்லபட்ட பரமசிவனுடைய பிரபாவத்தை தாங்கள் சொல்ல வேண்டும். கைலாசலத்தில் இருக்கிற பரமசிவன்

பார்வதியோடு கூட வகுளகிரிக்கு எதற்கு வந்தார்? என்ன பெயருடையவர்? அம்பிகையின் பெயர் என்ன? யாரால் முன் பூஜிக்கப்பட்டவர்? எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும். சில விஷ்ணு பக்தர்கள் சுத்த விஷ்ணுவையே பஜிக்கிறார்கள். அப்படியே சில சிவபக்தர்கள் சுத்த சிவனையே பஜிக்கிறார்கள். இங்கு ஸ்மிருதி அனுஷ்டான சீலர்கள் சிவனையும், விஷ்ணுவையும் ஸமமாக எண்ணிக் கொண்டு சிரத்தையோடு கூட பஜிக்கிறார்கள் என்று என்னால் தங்கள் மூலமாகவே முன்பே கேட்கப்பட்டது. எங்கெங்கே ஹரி லக்ஷ்மியோடு வசிக்கிறாரோ ஆங்காங்கு சிவன் பார்வதியோடு கூட வசிக்கிறார் என்ற வியாப்தியானது எங்கும் கேட்கப்படுகிறது.

இப்பொழுது பார்க்கவும் படுகிறது. ஆகையால் இந்த சிவனுடைய மஹாத்மயத்தை எனக்குச் சொல்ல வேண்டும். தங்கள் கதையைக் கேட்ட எனக்கு இன்னும் திருப்தி ஏற்படவில்லை. இந்தப் பிரகாரம் கேட்ட சந்திரகாந்தனுடைய வார்த்தையைக் கேட்டு வகுளாத்ரி பதியான பரமசிவனை வணங்கிக்கொண்டு சொல்லத் தொடங்கினார். கைலாச வாசியாயும் பூதேசராயும் பார்வதீ வல்லபராயும், பிரபுவாயும் சந்திரகலையால் அலங்கரிக்கப்பட்ட ஜடையோடு கூடினவராயும் சிரித்த முகத்தோடு கூடினவராயும், பரமாத்மாவாயும் ஸனாதனராயும், நாகாபரண பூஷிதராயும், சம்புவாயும், மன்மதனை ஜயித்தவனாயும், திரிபுரானை ஸம்ஹரித்தவராயும்; பரபிரும்மமாயும், பரந்தாமனாயும், பக்தர்களைக் காப்பதில் ஈடுபட்டவராயும், தயையோடு கூடினவராயும் ஆன பரமசிவன் ஒரு ஸமயம் தேவியைப் பார்த்து இவ்வாறு சொன்னார். எல்லா லோகங்களிலும் எல்லா க்ஷேத்ரங்களிலும் உன்னோடு கூடவே நான் லிங்க ரூபியாக இருந்து பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுத்துக் கொண்டு வசிக்கிறேன். ஹே தேவி! என்னிடத்தில் பலவிதமான சக்திகள் இருக்கின்றன. அவைகளில் மூன்று சக்திகள் முக்கியமாக என்னிடம் இருக்கின்றன. அதாவது (1) ஞானசக்தி (2) இச்சாசக்தி (3) கிரியாசக்தி என்று, ஞானசக்தியோ நீயே, கிரியாசக்தியோ விஷ்ணு,

இச்சா சக்தியோ பூலோகத்தில் லிங்க ரூபமாக தாம்பிர் பரணியின் தென்கரையில் வகுள மலையில் காணப்படு கிறது. விஷ்ணு ரூபமான கிரியா சக்தியும்பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுப்பதற்காகவே இந்த வகுள மலை யில் இருக்கின்றது. ஞான சக்தியான உன்னோடு கூட நானும் வகுள மலையில் வசிக்க விரும்புகிறேன். ஆகையால் நீயும் கூட வரவேண்டும். மறுக்கக் கூடாது என்று சொல்லிவிட்டு பார்வதியோடு கூட கைலாச பர்வதத்தை விட்டு சூரிய மண்டலத்தின் வழியாக ஒரு சைவமான ஜோதிஸ் ஒன்று வகுள மலையில் வந்து தோன்றிற்று. சூரியனும் அதைக் கண்ணுற்று லிங்க ரூபியான அந்த ஜோதிஸை ஆதரவோடு கூட அங்கு வந்து பிரதிஷ்டை செய்து தேவியையும் பிரதிஷ்டை செய்து ஆராதித்தான். அவாகளுக்குத் தன் பெயரால் மார்த்தாண்டேஸ்வரர், மார்த்தாண்டேஸ்வரி என்ற பெயரைச் சூட்டி தன் அபீஷ்டத்தை அடைந்தான்.

இந்த ஸமயத்தில் கேரள தேசத்திலுள்ள பிரசித்தி பெற்ற குலசேகரவர்மா என்ற அரசன் தீர்த்த யாத்த திரையாக பூமி முழுவதும் ஸஞ்சரித்து ஸ்நானம் செய்து கொண்டு வரும் பொழுது தாம்ரபர்ணியில் ஸ்நானம் செய்யவிரும்பி ஸ்வாமி புஷ்கரணி தாம்ரா ஸங்கமத்தில் ஸ்நானம் செய்து ஸர்வபாபங்களும் விலகினவனாய் திவ்யமான ஞானத்தையும் அடைந்து வகுளாத்ரிபதி யை ஸேவிப்பதற்காக இங்கு வந்தான் லிங்க ரூபியான பரமசிவனையும், பார்வதியையும் ஆராதித்து அவர்களுக்கு முறைப்படி தன் பெயரால் குலசேகர நாதர் குலசேகர நாயகி என்று பெயர் சூட்டி வணங்கி ஸ்தோத்தரம் செய்துவிட்டு வகுளாத்ரிபதியான விஷ்ணுவையும் பூஜித்துவிட்டு தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

**சந்திரகாந்த ராஜா:-** ஹே பகவான்! மிகவும் ஆச்சரி யகரமான கதை தங்களால் சொல்லப்பட்டது. குலசேகர நாதனை முதலில் ஆராதித்துபிறகு விஷ்ணுவை ஆராதிக் வேண்டுமென்று சித்ராங்கராஜனிடம் நாரதர் சொன்ன தில் எனக்கு ஒரு ஸந்தேஹம், அதாவது முன் சிவ தரி சனமும் பிறகு விஷ்ணு தரிசனமும் செய்ய வேண்டும்

ஏன் இப்படிச் செய்யவேண்டும்? இதை எனக்குச் சொல்ல வேண்டுமென்று விரும்பினர். அகஸ்தியர் சொல்கிருர்:— முன்பு ஒரு காலத்தில் பார்க்கவர் என்னும் விஷ்ணுபக்தர் விஷ்ணு தரிசன நிமித்தம் வகுளாத்ரிபதியை அடைந்து அடிக்கடி ஸேவித்து ஹே ஸ்ரீனிவாஸ! கருணைக்கடலே வகுளாத்ரிபதியே! பக்தனும் தாஸனும் உள்ள எனக்கு எல்லா இஷ்டங்களையும் கொடுப்பவராக தாங்கள் செய்யவேண்டும் எனப் பிரார்த்தித்து தன் இருப்பிடத்தை அடைந்தார். அவர் மார்த்தாண்டேஸ்வரரை ஸேவிச்காமல் சென்றதால் அது முதல்கொண்டு வயிற்று வலியால் பீடிக்கப்பட்டவராகி துக்கத்தால் வருந்தி வயிற்று வலியைத் தாங்கமுடியாமல் தரையிலே படுத்து ஹரேஹே ஸ்ரீனிவாஸ! உம்முடைய ஸேவை என்னல் செய்யப்பட்டது. உன்னை ஸேவிப்பவற்கு கஷ்டமே இல்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். உன்னை ஸேவித்த எனக்கு எப்படி வயிற்றுவலி ஏற்படலாம் என்று கவலையோடு கூட அயர்ந்து நித்ராவசமானர். அப்பொழுது ஸ்வப்னத்தில் சங்கு சக்ர கதையோடு கூட பகவான் தோன்றி வருளாத்ரியில் இருக்கிற பரமசிவனுடைய ஸேவை உன்னல் செய்யப்படவில்லை என்போல அவரையும் நீ பஜிக்கவேண்டும். நான்தான் அவர் அவரேதான் நான். ஸந்தேஹமே இல்லை. எங்கள் இருவர்களுக்கும் நிழலுக்கும் ரூபத்துக்கும் உள்ளது போல பேதம் இல்லை என்று இவ்வாறு சொல்லிவிட்டு பகவான் அந்தர்த்யானமானர் மறுபடியும் பார்க்கவர் காலையில் எழுந்து வகுளகிரிக்கு வந்து சங்கரரையும், விஷ்ணுவையும் பஜித்தார். அப்பொழுது பிரஸன்னமான அந்த பார்க்கவரை ரோகம் நீங்கினவராகச் செய்தார். ரோகம் நிவர்த்தி அடைந்த பார்க்கவர் சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் உள்ள ஒற்றுமையை நினைத்துச் ஸந்தோஷமடைந்தார். ஆகையால் முதலில் பரமசிவனை தரிசிக்க வேண்டுமென்று நாரதர் சித்ராங்கதனைப் பார்த்துச் சொன்னர். வேறு மஹாத்ம்யத்தைச் சொல்கிறேன்.

வகுளமலையின் உச்சியில் விஷ்ணு ஸ்தானம் இருக்கிறது. அதன் தென்புறத்தில் வெங்கடாசலபதி என்ற

பெயரோடு கூடிய பரப்ரும்மம் பிரகாசிக்கின்றது. எந்த ஸ்வரூபத்தை நினைத்த மாத்திரத்தில் மனிதன் சகல பாபத்தினின்றும் விடுபட்டு ஸமஸ்த அபீஷ்டங்களையும் ... வானோ, அப்பேர்பட்ட தாரு ரூபியான பரப்ரும்மம் ... இருக்கின்றது. அந்த ரூபம் விஸ்ணுவுமில்லை, பிரும்மாவுமில்லை, சங்கரருமில்லை. ஆனால் அது பரப்பிரும்மமே என்று நாம் எண்ணுகிறோம். ஹே அரசே! எந்த தாரு ரூபத்திற்கு தினந்தோறும் அபிஷேகமும் பூஜையும் இருக்கிறதோ அது பரம் பொருளாகவே இருக்கிறது.

சந்திரகாந்த ராஜா கேட்கிறார்:- தாருவுக்கு தினந்தோறும் இப்படி அபிஷேகஞ் செய்வது அத்யாச்சரியம் - இந்த இரு தாருக்களும் (கட்டைகள்) எங்குள்ளது? யாரால் பிரதிஸ்டை செய்யப்பட்டது? இதை விஸ்தாரமாகத் தாங்கள் சொல்ல வேண்டும் என்று கேட்ட சந்திர காந்தன் வார்த்தையைக் கேட்டு அகஸ்த்யர் சொல்கிறார். பரப்பிரும்மத்தினுடைய மஹாத்மயத்தைச் சொல்லுகிறேன் ஹே அரசே! கேள்.

முன் ஒரு காலத்தில் பாக்ஹீகம் என்று பெயரோடு கூடின தேசம் ஒன்று இருக்கிறது. அதற்குள் அநேக வீடுகளோடு கூடினதும், சரத்காலத்து மேகம் போல் வெளுப்பான மாளிகைகளோடு கூடினதும், தங்கத் தூண்களால் பிரகாசிக்கின்ற ஸ்படிகமயமான திண்ணைகளோடு கூடினதும், சிறந்த ஸ்திரீகளால் பிரகாசிக்கின்ற ஜன்னல்களோடு கூடினதும், ஸந்தோஸமாயும் புஸ்டியாயுமுள்ள ஜனங்களோடு கூடியதுமான கல்ஹாரம் என்ற பட்டணம் இருக்கிறது. அந்தப் பட்டணத்தில் பரம தார்மிகனும், சூரியனுக்கு ஒப்பான தேஜஸோடு கூடினவனுமான சுபகண்டன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் பராக்ரமத்தில் பரிதிக்கு (சூரியனுக்கு) ஒப்பானவனும், நியாயத்தில் தர்ம தேவதைக்கு நிகரானவனும், பகவத் பக்தியில் பிரஹலாதனைப் போன்றவனும் ஆனவன். அவனுக்கு ஒரு சமயம் கண்டமாலை என்னும் ஒரு புளவி கழுத்தில் கண்டது. அது நாளடைவில் பெரிதாகி புழு வைத்தது. அது முதல் அவன் கிருமிகண்டன் என்று கூப்பிடலானான். அவன் அதன் வேதனை பொறுக்க

மாட்டாமல் வைத்தியர்களும் குணப்படுத்த முடியாமல் கைவிட்டு விட்டனர். பிறகு எல்லா வைத்தியர்களுக்கு நாதனும் வைத்தியநாதன் என்று பெயர் பெற்றவரான பகவானையே சரணமாக நினைத்தான். ஸ்ரீனிவாசன் தான் தஞ்சமென்று நினைத்து ரோக நிவர்த்திகாக அநேக மான தனத்தை எடுத்துக் கொண்டு திருப்பதி க்ஷேத்ரம் சென்றான். அங்குள்ள ஸ்ரீனிவாசரைப் பஜித்தான். ஸ்வர்ண புஷ்கரணியில் ஸ்நானம் செய்து தான் கையில் கொண்டுவந்த காணிக்கைகளை ஸமர்பித்தான். அதன் பிறகு பார்த்திபன் பரிவாரங்கள் புடைசூழ கட்டியக் காரர்கள கட்டியம் பாட, வாத்யங்கள் முழங்க பக்தர்கள் எதிர் கொண்டழைக்க பரிசுத்த மனதுடன் வேங்கடகிரி மலை மீது ஏறினன். ஆலயத்தில் அரு உருவாய்த் தோன்றி அருள் புரிந்து கொண்டிருக்கும் ஸ்ரீனிவாஸனை அடி முதல் முடிவரை தரிசித்தான். அக் கணமே அவரை பூமியில் படுத்து பணிவுடன் வணங்கினான். எழுந்து நின்று எம் பெருமானை ஹ்ருதயத்தில் நிறுத்தி மனது இளகினன். மயிர் சிலிர்த்தான், கண்ணீர் வடித்தான், மனதிலிருந்து பொங்கி எழும்பும் பாமாலைகளை பூமாலை களாகச் சூட்டினன். ஆனந்தத்தால் அன்பைக் காட்டி அசையாமல் இருந்தான். அன்பர்களின் துன்பத்தைப் போக்கி இன்பமளிக்கும் பெருமானே நான் படும் துயரம் தாங்க முடியாதது. நல்லோருக்கு நலம் தருபவனும், புல்லோருக்கு புத்தி புகட்டுபவரும் என்னை ஆட்கொள்வாயாக. என் கஷ்டம் நீங்கும் வரை, யான் உன்னை விட்டு அகலேன். உனக்கு நான் அடிமை எனக்கு நீ அரசன், என்னை இந்தத் துன்ப நிலைமையில் பார்க்க உனக்கு பரிதாபம் உண்டாக வில்லையா? தாயும் நீ தகப்பனும் நீ காப்பவனும் நீ கடுந் துன்பத்தைத் தீர்ப்பவனும் நீ. நான் கற்றவனா யினும் என்ன பயன்? உனது கடைக்கண் பார்வை என் பேரில் விழாதவரை எனது கண்ட மாலை வியாதி எவ் விதம் நீங்கும்? உன் பாதத்தில் பூஜை செய்துகொண்டு உன் பக்கத்திலேயே வஸிக்க நான் வந்திருக்கிறேன் என்று வேந்தன் கதறி அன்று முதல் அங்கேயே வஸன மிருந்து கொண்டிருந்தான்,

இப்படி இருக்கையில் ஒரு நாள் பகவான் வேந்தன் கனவில் தோன்றி அரசனே! நன் மணமுள்ள சந்தனக் க[illegible]டைகளால் நீ ஒரு தேர் நிர்மாணம் செய்யவேண்டும். [illegible]பாழுது உன் வியாதி அனேகமாக நிவர்த்தியாகி சிறிது வியாதி மீதமிருக்கும். தேர் நிர்மாணம் செய்து முடித்த காலத்தில் 2 தாருக்கள் (கட்டைகள்) தன்படியே மீதமாக அமையும். அவற்றில் நான் ஆவேசித்துத் தோன்றி நிற்பேன். அப்போது நீ அவற்றை கட்டி எடுத்துக்கொண்டு வந்து பெருமையுடன் வகுளகிரி மலையில் பக்தர்களின் க்ஷேமத்திற்காகப் பிரதிஷ்டை செய்தால் உனது மீதமுள்ள வியாதியும் மறைந்துவிடும் என்று கூறி வெங்கடாசலபதி மறைந்தார். உடனே வேந்தன் துயில் எழுந்து யோஜித்து மாதவன் என் கனவில் தோன்றி மொழிந்த திருப்பணி எனது முன் ஜன்மத்திய மாதவத்தைக் குறிக்கின்றது. நாளையே நன்னாள் வைத்து நல்ல சிற்பிகளைக்கொண்டு நற்சந்தனக் கட்டைகளால் தேர் செய்யும் பணியைச் செய்து முடிக்கிறேன் என்று தீர்மானித்தான் அவ்விதமாக ஸங்கல்பம் கொண்ட சுபகண்டன் வேதியர் வேதம் ஓத ஜோஸ்யர் சுபமுகூர்த்தம் வைக்க, காயர் கீதம் பாட, சங்கத்வனி முழங்க, வாத்யங்கள் வகையாய் முழங்க நடன மாதர் நாட்டியமாட, பக்தர்கள் பஜனை செய்ய மிகவும் சந்தோஷத்துடன் ரதம் இயற்ற ஆரம்பித்தான். சில நாட்களில் திருத் தேர் கைதேர்ந்த சிற்பிகளைக் கொண்டு சிற்ப்பாய் செய்து முடித்து அதனை அன்புடன் அச்சுதனுக்கு அளித்தான். அரசன் வியாதி அநேகமாக தீர்ந்து விட்டது. பிறகு கடவுள் கனவில் கூறியபடி 2 தாருக்கள் மீதமாயிருந்தன. அவற்றில் வெங்கடேசன் ஆவேசமாகி விளங்கவே எண் திசைகளிலும் எதிர் பாரத ஒளி வீசலாயிற்று. அவைகளை அரசன் கடவுள் கட்டளைப்படி எடுத்துக்கொண்டு தென் திசையிலுள்ள வகுள மலைக்குச் சென்று உறங்காப் புளிய மரத்தின் வட பக்கமாகவும், ஸ்ரீனிவாஸன் இருப்பிடத்திற்கு தென் பக்கமாகவும் ஒரு பெரிய கோவிலைக் கட்டி ஸ்வாமி புஷ்கரணி தாம்ரா ஸங்கமத்தில் ஸ்நானம் செய்து பரிசுத்

தனுகி தாருக்களில் அவ்தரித்திருக்கும் வெங்கடேசப் பெருமாளை தான் கட்டிய கோவிலில் கொண்டுபோய் பிரதிஷ்டை செய்ய வந்தான். அந்த ஸமயத்தில் தேவர்கள் தேவேந்திரனையும், பிரும்மாவையும் முன்னிட்டுக் கொண்டு தரிசனம் செய்ய வகுளகிரியில் வந்து இறங்கினர். அப்போது பிரும்மா தாருக்களில் நின்றும் வீசும் தேஜோ மயமான தெய்வ ஸான்னித்யத்தை கண்டு வியந்து தானே வேத வாக்கியங்களைக் கூறி விண்ணேரும் கண்ணுரைப் பார்த்து களிக்கும்படி பிரதிஷ்டை செய்து 'வேங்கடாசலபதி" என்று திருநாமம் சூட்டி திவ்யமான புஷ்பங்களால் பூஜித்தார். அவ்விதமே இந்திரனும் பூஜித்தார். தேவர்கள் பூமாரி பொழிந்து துந்துபி வாத்யங்களை கோஷித்தனர் தேவ தாஸிகள் தாண்டவமாடினர். கந்தர்வ ஸ்திரீகள் கீதம் பாடினர். பூமியிலுள்ள பக்தசிகாமணிகள் "ஜய விஜயீபவ" "வேங்கடாசலபதே" என்று ஜய கோஷம் செய்தனர். ஜனங்கள் வெங்கடேசனைப் பணிந்தனர். நமது பாக்கிய வசத்தால் பகவான் தாருக்களில் தோன்றி இஷ்டங்களை அளிக்க இங்கு வந்திருக்கிருர் என்று எல்லோரும் இன்பத்துடன் இயம்பலாயினர். இவ்விதம் உத்ஸவானந்தம் பெற்று யாவரும் களிப்புடன் இருப்பிடம் சென்றனர். கிருமிகண்டன் வியாதி நீங்கியவனுய் முன்போல சுபகண்டனுகி வெங்கடாசலபதியை பன்முறை ஸேவித்து பரிவாரங்களுடன் தனது நகரம் சென்று ராஜ போகங்களை அனுபவித்துக் கொண்டு நாட்டைப் பரிபாலித்துக் கொண்டு வந்தான் வருஷந்தோறும் வெங்கடேசப் பெருமாளுக்கு திருநாள் நடத்திக்கொண்டு பக்தசிரோன்மணி என்று புகழ்பெற்று வாழ்ந்தான் என்று அகஸ்த்யர் சந்திரகாந்தனிடம் கூறி சித்ராங்கதனுடைய மீதமான கதையையும் கூற ஆரம்பித்தார்.

4-வது அத்யாயம் முற்றிற்று

# 5-வது அத்யாயம்

நம்மனைக்கு நம் பெரியோரானது போல்
செம்மையுலகம் படைத்த ஸ்ரீஹரியை- இம்மை
யெலாம்
முக்காலும் நம்பி மெய் வழியே நிற்பாரை
எக்காலும் காப்பாரென் றெண்,

சந்திரகாந்த ராஜனிடம் பின்னும் அகஸ்த்யர் கூறுகிறார்:- ஓ அரசனே! சித்ராங்கன் என்ற வேந்தன் நாட்டில் நின்று சைன்யங்கள், பரிவாரங்கள், வேலைக்காரர் முதலியவர்களுடன் வழியில் காடு, மலை, வனந்திரங்களைக் கடந்து பல மாதங்களுக்குப் பிறகு வகுளகிரி பதியை ஸேவிப்பதற்காக வகுளகிரிக்குப் புறப்பட்டு வந்து சேர்ந்தான் மனசந்தோஷத்துடன் ஸ்வாமி புஷ்கரணி தாம்ர ஸங்கமத்தில் ஸ்நானம் செய்து முதலில் சிவ க்ஷேத்ரம் சென்று குலசேகர நாதனையும் குலசேகர நாயகியையும் வணங்கினான், அவர்களைப் பலவாறாக ஸ்துதி செய்து பின் வகுளகிரியின் மீது ஏறி லக்ஷ்மிதேவியுடன் கூடின ஸ்ரீனிவாசனைக் கண்டு வணங்கி தான் கொண்டு வந்த காணிக்கைகளை ஸமர்ப்பித்தான். அதன் பிறகு வெங்கடாசலபதியின் ஆலயத்துக்குச் சென்று சிருஷ்டி. ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்ற ஐந்து க்ருத்யங்களை நடத்துகிறவரும் வேதமுடிகளால் தேடத்தகுந்தவரும், சந்தன தாருவிடம் தோன்றி விளங்குகிறவரும், அழிவற்றவரும் பிரும்ம விஷ்ணு மஹேஸ்வர வடிவமாய் இருப்பவரும், உலகங்களுக்கு எல்லாம் ஏகனாக இருந்து யாவரையும் அடக்கி ஆளுபவனும், பரம ஸ்வரூபமாக இருப்பவருமான வெங்கடாசலபதியை அடைந்து நமஸ்கரித்து ஸ்துதித்து பகவானுக்கு அளவற்ற ஆபரணங்கள், பட்டு வஸ்திரங்கள், குடை வெண்சாமரம் முதலிய ராஜ சின்னங்களை பரிசாக அளித்து தனது பக்தியை பரிமளித்தான். அதன் பிறகு ஆலயப்பணிகளைச் செய்து தனது கஷ்டம் நிவர்த்தி ஆவதை எதிர்பார்த்திருந்தான். நாளடைவில் அவனது வயிற்றுவலி பூரணவும் குறைந்து போய்விட்டது. பிறகு சித்ராங்கன் வெங்கடேசனிடம் அனுமதிபெற்றுக்

கொண்டு பரிவாரங்களுடன் நகரம் வந்து ராஜ்யத்தை அமைச்சரிடமிருந்து ஏற்று நடத்தி வந்தான். ஓ சந்திர காந்தனே ! இந்த வகுளகிரிபதியின் மஹிமையைக் கேட்பவருக்கெல்லாம் இஷ்டங்களைக் கொடுப்பவரும், புண்யத்தைக் கொடுக்கக் கூடியதும், புத்ரர்களை விரும்புகிறவர்களுக்கு புத்ர பாக்யத்தைக் கொடுப்பவரும், தனத்தை விரும்புகிறவர்களுக்கு ஸகல ஸம்பத்தைக் கொடுப்பவரும், ஆயுளை விரும்பபுவருக்கு தீர்க்காயுளைக் கொடுப்பவரும், ஆரோக்யத்தை வேண்டியவர்களுக்கு அரோக திடகாத்திரர்களாய் இருக்கச் செய்பவர் என்கிற விஷயத்துக்கு இன்னும் உனக்கு ஒரு சரித்திரத்தைக் கூறுகிறேன் கேள் என்று அகஸ்தியர் கூறுகிறார். ஓ வேந்தனே ! தாம்பிரபர்ணி நதிக் கரையில் திருப்பேரை என்று ஒரு நகர் இருக்கின்றது. அதில் கேதாரன் என்ற ஒரு பிராமணன் வசித்து வந்தான், அவனுக்கு நன்செய் புன்செய், தோட்டம், துறவு, தோப்பு முதலிய நில வளப்பமும், குபேரன் போன்ற பணத்தைப் பெற்றவனும் பத்து வர்க்கங்களை பராமரித்து பரிபாலிக்கிறவனும், தான தாமங்களைத் தவருது செய்து கொண்டுமிருந்தான். அவனுக்கு ஒரு மஹா பதிவிரதையும், மஹா லக்ஷ்மிக்கு ஒப்பானவளுமான மாலதி என்ற பெயரோடு கூடின ஒரு மனைவி இருந்தாள். நெடு நாளாக அவ்விருவர்களுக்கும் புத்ரப்பேறு இல்லாது மனக் கவலை கொண்டிருந்தனர். ஏராளமான வயல், பணம் முதலிய சகல சொத்துக்களும் தாங்கள அடைந்திருப்பது வீண் என்று நினைத்து மிகவும் ஏக்கம் பிடித்தவராகவே இருந்தனர்.

அப்போது வகுள கிரீசன் ஒரு பிராமண வடிவம் பூண்டு கேதாரன் கிருஹத்தைத் தேடி வலிய வநதார். அந்தப் பிராமணன் இவர்களால் தக்கபடி உபசரிக்கப் பெற்றார். தங்களுக்குள்ள குறையை பிராமணராக வந்த அச்சுதரிடம் கூறினர். அதற்கு அவர் வகுளகிரிபதியை நீங்கள் ஆராதிப்பீர்களானல் நல்ல புத்ரனைப் பெறுவீர் என்று சொல்லி மறைந்தனர். சாக்ஷாத் விஷ்ணுவே எங்களுக்கு அருள்புரிய அந்தணர் உருவம் பூண்டு வந்தனர். அவர் [illegible]க்கு வீணுகாது என்று திட

நம்பிக்கையுடன் கேதாரன் பத்தினியுடன் உடனே வகுளகிரிக்கு வந்தனன். ஆயிரம் பிராம்மணர்களுக்கு அன்னம் அளித்தான். அவர்களுக்குப் பூரண தக்ஷிணையும், நூதன வஸ்திரங்களேயும் தானமாகக் கொடுத்து வெங்கடாசலபதி கோயில் திருப்பணிகளேப் பண்பாய்ச் செய்தனர். ஏராளமான பூமிகளே நித்ய பூஜை செய்வதற்கு இனமாக அளித்தனன். மற்றும் உத்ஸவாதிகளே நடத்த திரளான திரவியங்களே ஸமர்ப்பணம் செய்தனன், பிறகு ஒரு வருஷத்திற்குள் கடவுள் கருணைபுரிந்து நீண்ட ஆயுளும் திடகாத்திரமும், கூர்மையான புத்தியும், நல்ல நடத்தையுமுள்ள புத்ரனே அருளினுர் அது முதல் கேதாரன் பிரதி வருஷமும் வகுளகிரி வந்து 1000 பிராமண போஜனம் செய்வித்து பகவானுக்கு அர்ச்சனே முதலியவற்றை அன்புடன் செய்துவிட்டு திருவிழா முதலியவைகளே வழக்கப்படி தடக்கமின்றி நடத்திக் கொண்டு தனது ஊர் சென்று வந்து கொண்டிருந்தான். ஆகையால் ஓ சந்திரகாந்தனே நீயும் வகுளகிரிபதி வெங்கடாசலபதியை ஸேவிக்க புறப்பட்டு போகக்கடவாய், நானும் அங்கிருக்கிற ஜகத்துக்கு அதிபதியான விஷ்ணுவை ஸேவிக்கப் போகிறேன் என்று அகஸ்த்யர் கூறி தன் யோக சக்தியினுல் சூக்ஷ்ம சரீரத்துடன் வானம் அளாவி வகுளகிரி வந்து ஸ்வர்ண புஷ்கரணி தாம்ரா ஸங்கமத்தில் ஸ்நானம் செய்து முதலில் சிவாலயம் சென்று பரமசிவனே வணங்கி ஸ்துதிக்கலானுர். ஓ பரமசிவனே! வேதமானது முதன் முதலில் உமது கோபத்தை வணங்கிவிட்டு பிறகு தான் உமது அம்பு, வில் அவற்றைத் தாங்கும் கைகள் இவற்றை வணங்கியிருக்கிறது. ஆகையால் உமது அருளே விட கோபத்திற்குத் தான் மஹிமை யதிகம். உமது கோபத்திற்கு இலக்காக இருப்பவன் உடனே அழிந்து விடுவான் நீர் எவனிடம் கோபம் கொள்ளாமலிருப்பீரோ அவன் மிகுந்த பாக்யம் பெற்றவன். உமக்கு ஒருவரிடமும் கோபமில்லாமையே பெரிய அனுக்ரஹமாகும், உமக்கு நான் பூஜை செய்யும் சமயத்தில் எவ்வளவோ குற்றங்களேத் தெரிந்தும் தெரியாமலும் செய்தவனுகிறேன். அவற்றைத் தாங்கள் பொறுத்தருள வேண்டும்- அதுவே எனக்கு பெரிய அனுக்ரஹ

மாகும், அவ்விதமே பலவாருக பார்வதி தேவியையும் ஸ்துதித்து இருவருக்கும் பூஜை செய்து விட்டு மலைமேல் ஏறிச்சென்று ஸ்ரீனிவாஸனைப் பூஜித்துவிட்டு தாரு வடிவமான வெங்கடாசலபதி ஸன்னிதிக்குச் சென்று பூஜித்து நமஸ்கரித்துஸ்துதிக்கலானர், சங்கு சக்ர கதை முதலான ஆயுதங்களை வஹித்து ஜகத்தைக் காப்பவனே, கமலக் கண்ணனே! ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழில் புரிகின்றவனே ஸ்ரீமன் நாராயணனே! பிரும்மா விஷ்ணு, சிவனுகவும் இருப்பவனே! ஸ்ரீமன் நாராயணனே இனியும் வேதத்தில் உமது மஹிமை விரிவாகக் கூறப்படுகிறது. எவ்விதமெனில் உலகத்தில் காணப்படுவது எல்லாம் நாராயணனே அவன் அழிவற்றவன். யாவருக்கும் பரமப் பிரபுவாக உள்ளவன் நாராயணனே, பரப்பிரும்மம், பரதத்வம் நாராயணனே, யாவராலும் சிரத்தையாலும் அறியத்தகுந்தவன் நாராயணனே; யாவருக்கும் பராயணன் நாராயணனே, நாராயணனே பரஞ்ஜோதி, நாராயணனே யாவரிடத்தும் பரமாத்மாவாகவுள்ளவன். யாதொரு உலகம் காணப்படுகிறதும், கேட்கப்படுகிறதுமாக யிருக்கின்றதோ அதனில் உள்ளும் புறமும் வியாபித்திருப்பவன் நாராயணனே. இவ்விதமாய் வேதம் உன்னை விளக்கிக் கூறுவதால் பிறப்பு இறப்பற்றவனும் எங்கும் வியாபித்தவனும், உலகங்களுக்கு நாயகனும் வெங்கடாசலபதியாகவு மிருக்கின்ற உம்மை நான் சரண்புகுந்தவனுகின்றேன். எனக்கு உமது பரமபதம் அளிக்க வேணுமென்று அகஸ்தியர் ரோமங்கள் சிலிர்க்க மனம் களித்து ஸ்துதி செய்துவிட்டு தனது இருப்பிடமாகிய மலய பர்வதத்திற்குச் சென்ருர். பிறகு சந்திரகாந்தனும் அகஸ்தியர் வாயிலாக வகுளகிரி மஹிமையைக் கேட்ட பின்னர் வெங்கடாசலபதியை ஸேவிக்க தனது நகரத்திலிருந்துபுறப்பட்டு வகுளகிரிக்கு வந்து ஸ்வாமி புஷ்கரணி தாம்ரா ஸங்கமத்தில்ஸ்நானம் செய்து முதலில் பார்வதி பரமேச்வரரை வணங்கி பிறகு ஸ்ரீனிவாஸனையையும் வெங்கடாசலபதியையும் அடிக்கடி நமஸ்கரித்து பூஜித்து பார்யா புத்ரமித்ரர்களுடன் தனது நகர் சென்று பிரஜைகளை நீதியுடன் ஆண்டுவந்தான்.

பிறகு சூதர் கூறுகிருர் :- மஹரிஷிகாள் ! இவ்விதம் வகுளகிரிபதியின் வெங்காசலபதியின் மஹிமையை காதால் கேட்கிறவர்களும், வாயால் உச்சரிக்கிறவர்களும்

தலையை அசைத்து ஆமோதித்தவர்களும் இவர்களின் புண்யத்தை பிரஹஸ்பதி பகவானே கூறமுடியாதென்றால் மற்றவரால் முடியாது. என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? வகுளகிரி மஹிமை எல்லா இஷ்டங்களையும் கொடுக்கக் கூடியது எவன் எதைக் கருதினாலும் அதை அளிக்க வல்லமையுள்ளதும், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததும் மட்டில்லாத மகிழ்ச்சியைத் தரத்தக்கதும் தேவர்களுக்கும் திகட்டாததும் ஆதலால் நாம் எல்லோரும் சிரத்தா பக்தியுடன்முழு முயற்சி எடுத்து வகுளகிரிபதியை ஸேவிக்க கடமைப் பட்டுள்ளோம் என்று ஸூத புராணிகர் கூறி முடித்தார். உடனே நைமிசாரண்யவாசிகளான மஹரிஷிகள் யாவரும் சூதபுராணிகரை முன்னிட்டு யோக சக்தியால் ஆகாச மார்க்கமாய் வகுளகிரி வந்து புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பரமசிவனையும் பார்வதி தேவியையும் ஸேவித்து விட்டு ஸ்ரீனிவாஸனையும் வெங்கடேசனையும் வணங்கி பலவாறாக துதித்து தமது இருப்பிடம் சென்றனர். பக்தர்கள் யாவரும் எதை எதைக் கோரினவர்களாய் சிரத்தையுடன் வகுளகிரிபதியான வெங்கடேசனை ஸேவிக்கின்றனரோ அவரவர்கள் கோரிய இஷ்டங்களை இக லோகத்தில் அடைந்து பரலோகத்திலும் பரமபதம் பெற்றவர்களாக ஆகின்றார்கள்.

கல்யாணகரமாயும் ஆச்சர்யகரமுமான சரீரத்தையுடையவரும், அவரவர்கள் இஷ்டத்தைக் கொடுப்பவரும் ஸ்ரீ வேங்கடகிரிநாதனுமான ஸ்ரீநிவாஸனுக்கு மங்களம். ஷை ஸ்ரீநிவாஸன் நமக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

இந்த ஸ்ரீ வேங்கடேச மாஹாத்மியம் எவரெவர் கிருஹத்தில் இருக்கிறதோ, அவரவர்கள் நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் குறைவற்ற செல்வத்தையும் அடைந்து கடைசியில் விஷ்ணுவின் பாதகமலத்தை அடைகிறார்கள்.

5வது அத்யாயம் முற்றிற்று

ஸ்ரீ வேங்கடேசாய மங்களம்,

வகுளகிரி மாஹாத்மியம் முற்றிற்று.

சுபமஸ்து.